[5th April 1958

MR. SPEAKER : It is an insinuation.

THE HON. SRI M. A. MANICKAVELU : I shall not try to go into insinuations but I wish to state that the Madras University and the Public Service Commission thought that that officer had sufficient qualification to be put in charge of this office. There was no other person available with superior qualifications.

*Women employees*

* 548 Q.—SRI V. K. KOTHANDARAMAN : Will the Hon. the Chief Minister be pleased to state the number of—

(i) Women non-gazetted officers;

(ii) permanent employees among them;

(iii) temporary employees among them; and

(iv) women employees who retired from service in 1956-57 in the Secretariat?

THE HON. SRI C. SUBRAMANIAM : (i) 98.

(ii) 19.

(iii) 79.

(iv) Nil.

SRI V. K. KOTHANDARAMAN : பெண்கள் கெஜட் பதவியற்ற உத்தியோகத்தில் சேர்ந்து, அவர்கள் கல்யாணம் ஆனவுடன், அடிக்கடி வேலையிலிருந்து போய் விடுகிறார்கள். ஆகையால், அநேகமாக டெம்பரரியாக இருக்கிறார்கள். இப்படி அடிக்கடி வேலையைவிட்டுப் போய்விடுவதனால், ஆபீசிலிருக்கும் வேலைகள் பாதிக்கப்படுகின்றன என்ற காரணத்தினால் கல்யாணமான பெண்களைப் பார்த்து உத்தியோகங்களில் அமர்த்த சர்க்கார் முன்வருமா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : இதிலே, பெண்களுக்கும் சம உரிமை கொடுக்கப்பட்டிருக்கிறது. ஆகையால், கல்யாணம் பண்ணிக் கொண்டிருந்தால்தான் இங்கே இந்த வேலை கொடுக்க முடியும் என்ற ஒரு விதியை நாம் ஏற்படுத்த முடியாது. பெண்களை இம்மாதிரி வேலைகளிலே நியமிப்பதினால் ஏற்படக்கூடிய சங்கடங்களைப்பற்றி கனம் அங்கத்தினர் சொன்னார்கள். அந்தச் சங்கடங்களைப் பொறுத்துத்தான் ஆக வேண்டும்; குடும்பங்களிலே நாம் பல சங்கடங்களைப் பொறுத்துக்கொள்வது போல்.

SRI M. C. MUTHUKUMARASWAMY : கனம் மந்திரி அவர்கள் சொல்லிய பதிலிலே, "பெண்களுக்குச் சம உரிமை கொடுக்கப்பட்டிருக்கிறது" என்று சொன்னார்கள். அதே முறையில் உத்தியோகத்தில் அவர்களை எடுத்துக்கொள்ளும்போதும் அவர்களுக்குரிய விகிதாசாரத்தின் படி கொடுக்கப்படுமா என்று அறிய விரும்புகிறேன்.

THE HON. SRI C. SUBRAMANIAM : இதிலே பெண்கள் தகுதி உள்ளவர்கள் வந்தால், தகுதி உள்ளவர்களை எடுப்பதற்கு சமவாய்ப்பு கொடுக்கப்பட்டிருக்கிறது. பாதி சதவிகிதத்தினரை எடுத்துக்கொள்ளவேண்டும் என்பதற்காக, தகுதி இல்லாத பெண்கள் இருந்தாலும், அவர்களை நியமிக்கவேண்டும் என்று சொல்ல முடியாது. வேலை செய்வதற்குத் தயாராக முன் வந்தால் தான் எடுத்துக்கொள்ள முடியுமே தவிர, சட்டம் போட்டு விகிதாசாரத்தின்படி அவர்கள் இங்கே வந்துதான் ஆகவேண்டும் என்று செய்யமுடியாது.

5th April 1958]

SRI A. A. RASHEED : How do the Government propose to solve the employment problem among the male population, if women are appointed in large numbers to Government posts?

MR. SPEAKER : The hon. Member may put a separate question.

*Secondary Grade teachers*

* 549 *Q.*—SRI A. VEDARATHNAM : Will the Hon. the Minister for finance be pleased to state—

(*a*) whether the Secondary Grade teachers in panchayat schools are paid the same scales of pay as those employed in schools under other managements; and

(*b*) if not, the action proposed to be taken to remove the disparity?

THE HON. SRI C. SUBRAMANIAM : (*a*) No, Sir.

(*b*) The matter is under active consideration.

SRI A. VEDARATHNAM : பஞ்சாயத்துப் பள்ளிகளில் வேலை செய்கின்ற ஆசிரியர்களுக்கு, இதர பள்ளிகளில் வேலை செய்கின்ற ஆசிரியர்களுக்குக் கொடுக்கப்படும் சம்பளம் கொடுக்கப்படவில்லை என்ற புகார் அரசாங்கத்திற்கு வந்திருக்கிறதா ? இவர்கள் பஞ்சாயத்து போர்டின் கீழ் இருக்கிற காரணத்திற்காக இவர்களுக்கு மாத்திரம் குறைத்துக் கொடுப்பது நியாயமா ? அதைப் பரிகரிக்க அரசாங்கம் முன்வருமா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : அதனால் தான் இந்தப் பிரச்னை பரிசீலனையில் இருக்கிறது. கூடிய சீக்கிரத்தில் இதிலே உத்தரவுகள் பிறப்பிக்கப்படும்.

MR. SPEAKER : 550 கேள்வியை கனம் மந்திரி அவர்கள் வந்த பிற்பாடு எடுத்துக்கொள்ளுகிறேன். இப்பொழுது 551-வது கேள்வியை எடுத்துக்கொள்வோம்.

HON. MEMBERS : What about Question No. 550?

MR. SPEAKER : I have just now explained that that question would be taken up later. That question really belongs to the Minister for Home and due to a printer's mistake it has been put in the name of the Minister for Revenue. If hon. Members do not have patience, what can I do?

*Kaniyur Panchayat*

* 551 *Q.*—SRI N. MARUDACHALAM : Will the Hon. the Minister for Local Administration be pleased to state—

(*a*) whether the members of the Kaniyur Panchayat have represented to the District Panchayat Officer that panchayat meetings should be held, as panchayat meetings had not been held from 26th March to 25th December 1957; and

(*b*) if so, the action by the Panchayat Officer against the President of the panchayat for not having held the meetings?

THE HON. SRIMATHI LOURDHAMMAL SIMON : (*a*) A petition was sent by one member to the District Panchayat Officer, Coimbatore.